உ

கடவுள் துணை. 1493

# திருவள்ளுவநாயனார்

அருளிச்செய்த-சரித்திரமும் மாலையும்

# திருக்குறள்

மூலபாடம்.

இவை,

திருத்தணிகை

சரவணப்பெருமாளையர்

முன்பதிப்பித்தபிரதிக்கிணங்க

பூவிருந்தவல்லி

கந்தசாமிமுதலியாரால்

பார்வையிடப்பட்டு.

செந்நீர்குப்பம்

கன்னியப்பமுதலியார்

அவர்களது

கமலாலயவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1883ஆம்.



உ

கடவுள் துணை.

# திருவள்ளுவநாயனார்சரித்திரம்



உலகத்துள் மகாசிறப்புப் பொருந்திய கைலாயகிரியிலே அரசிருக்கைமண்டபத்தில் பிரமாதிருப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரமுனிவர்கள் கின்னரர் கிம்புருடர் கருடர் காந்தர்வ சித்தர் வித்தியாதரர் முதலானவர் வணங்கிச் சூழும்படி பார்ப்பதிசமேதராய் பரமசிவன் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்தார். அப்போது தேவியானவள் எழுந்து வணங்கிநின்று சுவாமி திரிலோகத்திலே இல்லறம்வழாது நடந்து கதியடைந்தவருண்டோவென்றுவினவ, சுவாமி திருவுளம்பற்றுகிறார்? உமையவளே தேவலோகத்தில்-வசிஷ்டர்-அகஸ்தியர்-அயன்-புயங்கன்-சம்பு- என்று ஐந்துபேருண்டு. பூலோகத்தில் திருவள்ளுவனொருவருண்டு! இவர்கள் தென்புலத்தார்கடன் - தேவர்கடன் - விருந்தோம்பல்-சுற்றந்தழுவல்-கபிலை பூசைசெய்தல் முதலிய இல்லறத்தில் கற்பின்வழுவாத நற்குணத்செய்கையுள்ள மனைவியரோடிருந்து இல்லறக்கடன் ந

டத்திக் கதியடைந்தாரென்று திருவாய்மலர்ந்தருள ப்பூலோகத்திலே திருவள்ளுவர் என்பவர் யாரென் றுகேட்க! பூர்வத்திலே ஒரு பிரளயம்வந்தது அதுவ ருமென்று பிர்மா முன்னமே தெரிந்து, அதிலேயிறவா து பிழைக்கும்படி வேற்றுவடிவமாய் ஒருசுரைக்கூட்டைத் தனக்கிடமாகக்கொண்டு அதிற்புகுந்து அவ்வெள்ளத்தின்மேல் மிதந்துவந்தான் அதுகண்டுநாம் அறியாதவர்போல் இதற்குள்ளிருப்பவன் யாரென் றுகேட்டோம் தான்வருங் காலமறிந்து செய்தற்கேற்ப வள்ளுவனென்றார். இப்பிரளயத்தில்நீரெப்படிபிழைத்திருந்தீரெனக்கேட்க, சுவாமியென்றுதெரிந்து மிகுந்த பேரானந்தத்தை யடைந்து பரமசிவனே உமது திருவருளினால் பிழைத்திருந்தேன் ஆயினும் இந்தப் பிரளயத்தை நீக்கியருள வேண்டுமென்று வேண்டிக்கொள்ள நாம் அந்த அதிகாரம் உமக்கே கொடுத்தோமென்று அவராலே முன்போல் உலகத்தைச் செய்வித்தோம் அத்தன்மையுடைய அவர் பூமியிலே பிறந்தகாரணமுஞ்சொல்லுகிறோம்.

ஆதிகாலத்தில் பூமியிலேபாண்டி நாட்டில்மதுரைமாநகரத்திலிருந்த சங்கப்புலவர்கள் நம்மைஅவமதிப்புச்செய்ததின்பொருட்டு அவர்கள் கர்வபங்க



அவ்விலுப்பைமலரிற் றுளிக்குந் தேனையுண்டு பூர்வம்பிர்மாவாதலால் சிகை எக்ஞோபவீதம் சதுர்வேத

புஸ்தகமுங்கொண்டு வளர்கையில கஙகா குலசிரேஷ்டனுகிய ஒருவேளாளன் மனைவிபுத்திரனைக் குறித்து அச்சிவாலயசந்நிதியில் தவஞ்செய் திருந்தாள். அப்பொழுது உமாதேவி அவளுடைய தவத்துக்கிரங்கி தெய்வச்செயலாலுண்டாகிய இக்குழந்தையை நீளடுத்துக்கொண் டருள்செய்து திருவள்ளுவனென்று பூர்வநாமகரணஞ்செய்தாள் அவளும அக்குழந்தையை எடுத்தும்கிட்சியடைந்து கொண்டுபோய்த வ்புருஷன்கையிற் கொடுத்தாள் அவனுந் தன்கையில்வாங்கிப்பேரானந்தமபெற்று அதுவந்த வரலாறு கேட்டு இப்படியிருவருமந்தப் பிள்ளையைநாளொருமேனியாக வளர்க்குங்காலத்தில்அவர்சுற்றத்தார்கள் ஏதோ ஒருபிள்ளையை வளர்க்கிறார்களென்று இவர்களை இகழ்ச்சிபண்ண அதற்கு அவர்களஞ்சிப்புறத்திலுள்ளதோர்தொழுவத்திலேதொட்டிலிட்டுஅதில க்குழந்தையைவைத்து வளர்த்தார்கள் பின்புதிருவள்ளுவரும் ஐந்துவயதானகாலத்துத் தன் பொருட்டுத்தாயுந்தகப்பனும் சுற்றத்தார்களால் நிந்தைசெய்யப்படுகிறார்களென்று அவர்களைப் பார்த்து என்னாலுங்களுக்கு வருத்தம்வேண்டுவதில்லை நான்வேறிட



வரிருக்குககொடுக்க நினைத்திருக்கிறேன் அப்படியே அங்கீகரிக்க வேண்டுமென்று சொன்னான் நாயனார் உலகத்தாருக் கில்லறநடத்திக் காட்டவேண்டும் காருணைத்தையோசித்து அந்தப்பெண்தான் கொடுக்குமணலை அன்னமாக்கி எனக்கிடுமானல் விவாகஞ் செயதுகொள்ளுவே னென்றார் அந்தப்பெண் அப்படியே சம்மதித்து சமைத்துப் படைத்தனள்,

காயனருமங்கீகரித்து விதிப்படிவாசுகியை விவாக ஞ்செய்து சிலகாலகிருந்து பின்பு மனைவியுடன் மயிலையில்வந்தோரில்லாக்கிக்கொண்டு இல்லறஞ் செய்து நெய்தற்றொழில் பாபமில்லாததென்று ஏ லேலசிங்கனென்னும் வர்த்தகனிடத்தில் நூல்வாங் கி ஆடைநெய்து அக்கூலியால் ஜீவனஞ்செய்திருந்த னர். பின்பு ஒருகாலத்தில் திருவாலங்காட்டில் ச பாநாயகர் மயிடசங்காரஞ்செய்து கொவித்திருந்த பத்திரகாளிகொர்வபங்கமாகப் பலவித நடனஞ்செ ய்ய அவளுந்தோல்வி யடையாமலாடிவந்தாள். பின் புஸ்வாமி குண்டலங்கழன்றதைக் காதிலேதானே சேரும்படி ஊர்த்துவபாதமாக நடனஞ்செய்தார். அவளுமப்படியாட நாணித்தோற்றாள் அப்பொழுது தேவர்கள் ஸ்வாமீ தேவரீர ஊர்த்துவ தாண்டவம் பண்ணின தென்ன காரணமோ தெரியவில்லை யெ



மாகும்படி பிரம ஸ்வரூபராகிய திருவள்ளுவனையும் மகாவிஷ்ணுவையும் சரஸ்வதியையும்பூமியில் அவத ரிக்கும்படி அனுப்பினோம் அவருள் மகாவிஷ்ணுஇ டைக்காடராய்ப் பிறந்தார் சரஸ்வதியும் திருவள்ளு வரும் வந்த மரபுங்கேள்.

ஆதியிலே பிரமபுத்திரர்களாகிய காசிபர் முத லிய நவப்பிரமாக்களில் காசிபர் ஊர்வசியைச்சேர்ந் து வசிஷ்டனைப்பெற்றார் அவர் அருந்ததியைச் சே ர்ந்து சத்தியனைப்பெற்றார் அவர் புக்கநார் புலைச்சி யைச்சேர்ந்து பராசரைப்பெற்றார், அவர் மச்சகந்தி யைச்சேர்ந்து வியாசனைப்பெற்றார், இவர்கள்நால்வ ரும் வேதங்களுக்குரியவ ரானார்கள்.

பின்பு பிரமாவானவன் இன்னுஞ்சிலபுத்திரரா ல் வடமொழியையுந் தென்மொழியையும் விளங்கச் செய்யவேண்டுமென் றெண்ணி வேதவிதிப்படி ஒரு யாகஞ்செய்ய அதன்கண் வைத்திருந்த கும்பத்திரு ந்து கலைமகளவதரித்தனள். அவளைப்பிரமன் விவாக ஞ்செய்துகொண்டான். பின்புஅகஸ்தியர்க்கூறிய வ டிவோடு அக்கும்பத்துதித்தனர், அவர்சமுத்திரகன் னிகையை மணந்து பெருஞ்சாகர னென்பவனைப் பெற்றார் அவர்திருவாரூர்ப் புலைச்சியைச்சேர்ந்துபக



வ்னென்பவனைப்பெற்று அவருக்குச் சகலசாஸ்திர ங்களையுங்கற்பித்தார் அந்நாளில்பிரமவம்சத்தில்தவ முனியென்பவர் அருண்மங்கையென்னும் பிராமண மாதைச்சேர்ந்து ஒருபுத்திரியைப் பெற்றுவைத்துவி ராலிமலையில் தவஞ்செய்யச் சென்றனர். அக்குழந் தையை உறையூர்ப்பெரும்பறையன் கண்டெடுத்து ச்சில்காலம் வளர்த்துவருகையில் மேல்நடக்கப்போர் கிறகாரணத்தினால் இந்தப்பெண் தவிர மற்றவர்கள் யாவரும் இறக்கும்படி அந்தச்சேரியில் யாதுகாரண மோ மண்மாரிபெய்தது பின்பு அந்தப்பெண்அதற்க டுத்தபேடூர் அாரத்திலே நீதியையன்வீட்டில் வள ர்ந்திருந்தனள்.

அப்போது பாவனென்பவர் சகலசாஸ்திரபண் டிதராய்க் கண்டவர்யாவரும் மரியாதை பண்ணும்ப டிபிராமணகிர்த்தியதில் வழுவாதவராயிருக்கையில்

யாத்திரைபண்ணும்படி யிச்சைகொண்டு காசிக்குப்
போகும்போது இவ்வகரத்துக்கடுத்தஒருசத்திரத்தி
லிறங்கிநித்தியகருமங்களை முடித்துக்கொண்டுசமை
யல் செய்திருந்தார் இவ்விடத்தில் அந்தப்பெண்வர
அவளைக்கண்டு நீயார் புலைச்சியோ வலைச்சியோ இங்
கேவந்தாயென்று அதட்டிமிகுந்த கோபங்கொண்டு



சட்டுவத்தால் அவளதுதலையிலே உதிரஞ்சோர அ
டித்தோட்டினார் அவள் அழுதுகொண்டு தன்னிடத்
துக்குப்போய்விட்டாள் மறுபடியும்பகவனென்பவ
ர் ஸ்நானஞ்செய்து போசனம்பண்ணி அதிசீக்கிரத்
தில் வழிக்கொண்டுசிலநாளிற்காசிக்குப்போய்க்கங்
காஸ்நானஞ்செய்து பிரயாகையிலிருந்து தீர்த்தக்கா
வடிக்கொண்டுவரும்போது அந்தச்சத்திரத்தில் வந்
திறங்கினார்மேற்சொல்லிய பெண்ணானவள் அப்போ
து மகாலட்சுமியைப்போலும் அழகும் யவ்வனபரு
வமும் உடையவளாய் அங்கேவந்தாள் பகவனென்
பவர் இவளுடைய சௌந்தரியமுதலிய குணங்களை
ப்பார்த்து மோகங்கொண்டார் அச்சத்திரத்திற்கு அ
திபராகிய நீதியையென்பவர் அக்குறிப்பினைக் கண்
டு என்பெண்ணை விவாகம்பண்ணிக்கொண்டு இங்கே
யிருமென்றுசொல்ல அதற்கவர் நான்கொண்டுவந்த
காவடியை இராமேசுரத்திற் செலுத்திவந்து அப்ப
டியேசெய்கிறேனென்று அவரிடத்திலேசெலவுபெ

ந்துக்கொண்டுபோய் இராமலிங்கத்திற்கு அபிஷேக
ம்பண்ணித்திருப்பிவந்தார் அப்போது நீதியையர்வி
வாகயத்தமும் பணணிப் பந்துக்களோடிருந்துவிசே
ஷமாய்நாலுநாளையசடங்குகளுஞ்செய்ய ஐந்தாநாள்
மங்களஸ்நானஞ் செய்விக்கும்போது பகவனென்ப



வர் அந்தப்பெண்ணினுடையதலையில் எண்ணையைப் பெய்யுமபடி மயிரைவகிர்ந்தார அப்போதுதான்மயிர் புசட்டுவைத்தாலடித்த வடுவைக்கண்டு அதுமானித்து இந்தப்பெண்ணினது வரலாற்றையும விசாரித்து வியசனங்கொண்டு நீ ஆதியளல்லவாவென்று சொல்லிவிட்டு ஓடினார் அதுவேஅவளுககு ஆதியென்று காரணப்பெயராயிற்று.

அப்படியோடிய பகவனென்பவர் பொழுதுபோகையால் எதிரேகண்ட பாணர் சேரியிலிருந்த ஒருமண்டபத்திலே தங்கினார் ஆதியென்பவளும் அவர்பின்னேதொடர்ந்து அவரைககண்டு தெயவச்செயலால் உமக்குமெனக்கும இந்தக்காரியம் நடந்திருக்கநீர் என்னைவிட்டுபபோகுதல் உமககுத தகுமோ அல்லது தருமமோவென்றும உம்மைநீங்கினால்உயிர்வாழேனென்றும் மிகவும் இரக்கத்துடன் சொல்லிப்பிரார்த்துவத்தால் இவர்புத்தியிலு மதுசரியென்றுபட்டுப் பெண்ணேஎன்னிடத்தில் உனக்கு அன்பிருக்குமானால் யான்சொன்னபடி கேட்க வேண்டும்.

அகுதென்னெனில் உனக்குப்பிள்ளைகள்எங்கெங்கே
பிறக்கிறதோ அங்கங்கே அவைகளை அப்போழ்தே
விட்டுவருவையானுல் யானுன்னைக்கூடச் சம்மதிப்



பேனென்றுசொல்லஅவளதற்கு உடன்பட்ட படி.
யாலன் றிரவி லம்மண்டபத்தி இருவருங் கூடினர்
கள்.

## ஔவை

அப்போது பரமசிவன் உத்தரவின்படி சரஸ்வ
தியாவராலும்புகழப்பட்டு ஔவையாகிப்பிறந்தாள்
இந்தக்குழந்தையை யாவர்காப்பாற்றுவரொன்றுவிட்
டுநீங்கத் தாய்வருந்தும்போ தது சொல்லியது.

### வெண்பா.

இட்டமுடனென் றலையிலின்னபடியென்றெழுதி
விட்டசிவனுஞ்செத்துவிட்டானே-முட்டமுட்டப்
பஞ்சமேயானுலும்பார மவனுக்கன்றோ
நெஞ்சமேயஞ்சாதேநீ

அதுகேட்டு மனந்துணிந்து போயினள் பின்பு
அக்குழந்தையை அச்சேரியிலுள்ள பாணர்களெடு
த்து வளர்க்கவளர்ந்து சரஸ்வதியருளால்இயல்யா
கவேகலைமுழுதும்அறிந்து சிதக்களப வென்னுங் க
ணபதிஅகவல்பாடி அவரை உபாசித்து லோகோப
காரமாக, ஆத்திசூடி-கொன்றைவேந்தன் - மூதுரை
நல்வழி-ஞானக்குறள்அசதிக்கோவை-என்னூற்கோ

பையென்னவந் தவதரித்து வண்ணார்வளர்கக வளர்ந்து மாரியம்மையாய் உலகமெல்லாந் தன்னைப்போற்ற அப்பொழுதும அவ்வூரில் தெய்வமா யிருக்கின்றனள்.

(அதிகமான்,)

இதுநிற்க முன்புபோன அவ்விருவருஞ் சோழதேயத்திற் கருவூரிலடைந்து ஒருசோலையிற்கூட அதிகமானென்பவர் பிறந்தார் இக்ககுழந்தையையா வர்காப்பாற்றுவாரென்று அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும்போது அதுசொல்லியது.

(வெண்பா.)

சருபபைக்குண் முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும, விருப்புற்றமுதளிக்குமெய்ய-னுருப்பெற்று ஆட்டிவளர்க்கானோ வோகெடுவாயன்னாய்கேள், வாட்டமுனக்கேன்மகிழ்.

அதுகேட்டு மனந்துணிந்து போயினள், அந்தக்குழந்தையைச் சேரமானெடுத்து வளர்க்கவளர்ந்து-வில்வேதம் மனுவிக்கிபானமுதலியவுங் கற்றுமுடிசூட்டபபெற்றுச் சொக்கநாதர் திருமுகமெழுதிக் கொடுக்கப் பாணபத்திரருக்கு வேண்டிய திரவியங்



கள்கொடுத்துப் பொன்வண்ணத்தந்தாதி யென்றோர் பிரபந்தமபாடிச் சிதம்பரத்தி லரங்கேறறிஅரசுசெ

இந்தச் சங்கரமூர்த்தியார் நட்புப்பெற்றிருந்து அவர்கைலைக்குப்போகும்போது உடனேபோய் அங்கே தாம் பாடியருளிய ஆதியுலாவை அரங்கேற்றிச்சிவா னுக்கிரகம் பெற்றுவீற்றிருந்தார்.

(உறுவை.)

முன்புபோன அவ்விருவரும் காவிரிப்பூம்பட்டினத்தடைந்து ஒருமண்டபத்திற் கூடினார்கள் உறுவையென்பவள் பிறந்தாள் இந்தக்குழந்தையை யாவர் காப்பாற்றுவாரென்று அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும்போது அதுசொல்லியது.

(வெண்பா.

கண்டைப்பைபக்குள்ளுயிர்சன்றுயருந்தந்தானா ருந்தும். அண்டத்துயிர்பிழைப்பதாச்சரிய - மண்டியலிலகின்றவன்னுயரனுடையவுள்மை, நிலைகண்டுநீய திந்நாகில்.

அதுகேட்டுத் தாய்மனந்துணிந்து போயினள் பின்பு அக்குழந்தையைக்கள்விற்போரொடுத்துவளர்



க்கவளர்ந்து தவஞ்செய்துபத்திரகாளியாய்த் தாருகனைக்கொன்றுதிருவாலங்காட்டில்சபாநாயகருடனே நிருத்தஞ்செய்து அதிலேதோற்றுஅகோர வீரபத்திரனைவிவாகம்பண்ணிக்கொண் டவ்விடத்திருந்தாள்.

(கபிலர்,)

இதுநிற்க முன்பு அவ்விடம்விட்டுப்போன இ
ருவரும் திருவாரூரையடைந்து ஒருமண்டபத்திற்கூ
டக்கபிலரென்பவர் பிறந்தார் இந்தக்குழந்தையையா
வர்காப்பாற்றுவாரென்று அதைவிட்டுநீங்கத் தாய்வ
ருந்தும்போது அதுசொல்லியது,

(வெண்பா,)

கண்ணுழையாக்காட்டிற் கருங்கற்றவளைக்கு
முண்ணும்படியறிந்தூட்டுமவர்-நண்ணு
நமக்கும்படியளப்பார் நாரியோர்பாகர்
தமக்குந்தொழிலென்னதான்

அதுகேட்டுமனந்துணிந்து போயினள் அக்கு
ழந்தையைத் தனக்குப் பிள்ளையில்லாத பாப்பைய
னொருவனும் ஒருபிராமணனெடுத்துவளர்த்து ஏழுவ
யதில்உபநயனஞ்செய்யத் தொடங்குகையில் பிராம



ணர்கள் ஒத்துக்கொள்ளமாட்டோமென்றுசொல்ல
அதைக்கண்டகபிலர் அவர்களைப்பார்த்து நான்முக
த்தோனென்றோர் அகவல்சொல்லிக கர்மத்தினால்
சாதியன்றிச்சென்மத்தால் இல்லையென்றுசாதிக்கஅ
தற்குப் பிரதியுத்தரஞ்சொல்லமாட்டாமல் இதுவே
விதியென்று யாவரும்ஒத்துக்கொண்டு அச்சடங்கு
முதலானவை முடித்தார்கள் அக்கபிலர்இன்னும்பா
தாளவுலகத்தில் தவம்பண்ணிக்கொண் டிருக்கின்

றனர்

(வள்ளியம்மை,)

இதுநிற்க முன்புபோன அவ்விருவரும் வேளி ன்மலைச்சாரலில் வந்துகூட அப்பொழுது வள்ளியம் மைபிறந்தன ளிந்தக்குழந்தையை யாவர்காப்பாற்று வாரொன்று அதைவிட்டுநீங்கத்தாய் வருந்துமபோது அதுசொல்லியது,

(வெண்பா)

அன்னைவயிற்றிலருத்திவளர்த்தவன்று
மின்னும்வளர்க்காளேவென்றுயே-மின்னாவந்
குடும்பெருமான்சுடுகோட்டி லின்றுவிளை
யாடும்பெருமானவன்,

கசு திருவள்ளுவநாயனார்சரித்திரம்,

அதுகேட்டு மனந்துணிந்துபோயினள் பின்பு அக்குழந்தையை மலைக்குறவர்கள் வளர்த்தார்கள் அ வள் முற்பிறப்பில் யாரெனில் மகா விஷ்ணுவினால் மோகிக்கப்பட்ட விபுதையென்பவளிடத்திற் பிறந்த குமாரியென்பவள் சுப்பிரமணியக்கடவுளைக்குறித்துத் தவஞ் செய்தபோது அவர்வரப்படி தொண்டைமண்டலத் தில் வள்ளிமலையிலிருந்த கடவுளுக்குநாயகியானள்,

(திருவள்ளுவர்)

முன்புபோன அவ்விருவரும் மயிலைநகரத்தில் இலுப்பைத்தோப்பிற்கூடினார்கள் அப்பொழுது தி ருவள்ளுவர்பிறந்தனர் இந்தக் குழந்தையை யாவர் காப்பாற்றுவாரொன்று அதைவிட்டுநீங்கத் தாய் வரு

ந்தும்போது அதுசொல்லியது.

எவ்வுயிருங்காக்கவொருவிசத்துண்டோவில்லையோ
வவ்வுயிரில்யாமொருவனல்லவோ-வவ்வி
யருகுவதுகொண்டிக்கல்லவதேனன்னே
வருகுவதுதானேயருப்;

அதுகண்டு மனந்துணிந்து அவ்விருவருந் தீர்த்தயாத்திரைக்குப்போயினர் பின்பு சிவாலயத்தின் அருகேயுள்ள திருப்பையாத்திக்கீழிருந்தருந்தை



ன்றுகேட்க நீர் திருமயிலையிலிருக்குந் திருவள்ளுவரைக் கேட்டாறல் தெரியுமென்று சொல்ல தேவர்களங்கேபோயவரைக்கேட்க, அவர்சொல்லியது.

வெண்பா.

பூமிலவனும் புரந்தரனும் பூவுலகைத்... ...... ...*
தாமப்பளக்தோறுந் தாமிருக்க - நாவி... ... .....*
விழைநக்கி நானெருடு மேழைப்பிவேனே... ... *
குழைநக்கும் பிஞ்சகன்றன் கூதிநு.. ... ... ......*

அதிலேதெரிந்து தங்கள் சந்தேகந்தெளிந்தார்கள். ஒருநாள் நால்வாங்கும்பொருட்டு ஏலேலசிங்கன் வீட்டுக்குப்போய் செட்டியார் எங்கேயென்று கேட்க, அவர்சிவபூசைசெய்கிறு ரென்றார்கள். அவர்சிவபூசை இங்குச்செய்கிறரோ குப்பத்திற்செய்கிறரோ வென்ன, அதைஅவர்பந்தனிடன்ளேபோய் அவருக்குச்சொல்ல அவர்கேட்டுச் சிவபூசையைவிட்டுத் திடுக்கிட்டோடிவந்து நாயனருடைய உபயபாதங்களில் வணங்கிஸ்வாமீ! என்னைபந்தசாகரத்தினின்று மெடுத்துக்கரையேற்றவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய நாயனர் அவரதுபக்குவத்தையும் இன்னுஞ்சிலமாணுககர் பக்குவத்தையுஞ்சோதிக்கவெண்ணி ஒருநாள் அவர்களை அழைத்துக்கொண்டு ஒருவனத்திற் சென்று அங்குவெள்ளம் பெரு



கிவரச்செய்தனர். அவர்கள்பயந்து மனேதிடமின்றி மிக்கனாயிலிருந் துடன்போகமாட்டாமல்விழிக்க ஏலேலசிங்கர்மாத்திரந் தம்மைத்தொடர்ந்துவர அவ்வெள்ளம் வழிவிட்டது பின்ப ஒரு உயர்ந்தமரத்தினுனியி லேறென்றுசொல்ல, ஏலேலசிங்கரேறினர். பின்புபிடித்தகொம்பையும் நின்றகொம்பையும் விட்டுவிடென்றருள, யோசியாமல்விட்டனர் விட்டும் ஒரு அபாயமில்லாதிருந்த ஏலேலசிங்கரைத் தமது

மடியின்மேல் வைத்து ஞானோபதேசம்பண்ணி எப்படிப்பட்ட சௌந்தரியமுள்ள மங்கையர்கள் மயக்கினு மயங்காத திடச்சித்தத்தையு மனுக்கிரகித்தார். பின்பு தம்மிடத்திற்கு வந்துவிட்டார்களப்படியிருக்குநாளி லங்காட்டுக்கரசனுகிய அச்சுதராஜன் ஒருநாள் ஏலேலேசிங்கரோடு பேசிக்கொண்டிருக்கும்போது உமக்குப் புத்திரப்பேறில்லையே உம்முடைய ஞானசிரியனை அப்பேறுண்டாகக் கேட்கலாகாதாவென்ன, அவர்நல்லதென்றுபோய் மற்றொருநாள் நாயனாரைக்கண்டு விண்ணப்பஞ்செய்ய, அவர் ஸ்வாமிகடாட்சிப்பாரென்று அநுக்கிரகம் பண்ணினார். பின்பு ஒருநாள்பரமசிவமே சிறுகுழவியாய ஏ

லேலசிங்கரும் அவர் மனைவியும் நித்தியந்தரிசிக்கும் பசுவின்வாலின் புறத்திற்கிடந் தழுவதைக்கண்டு அ



வ்விருவரும் இக்குழந்தையை ஏதெனவெடுத்தார்கள். உடனே அந்த அம்மாள் ஸ்தனங்களிலேபால் சுரந்துபெருகஅக்குழந்தைக்குப்பால் கொடுத்துஞானகுருவாகிய நாயனார்சந்நிதானத்திற் கொண்டுபோனார்கள். அவர் அக்குழந்தைக்கு அழகானந்தரென நாமகரணம் பண்ணினார். உடனே ஏலேலசிங்கர் அச்சுதராஜனென்னும் அரசனிடத்திற்சென்று எனககு தெய்வீகத்தினல் குழந்தை யுண்டாயிற்றென்று சொல்ல அவன் அப்படிதெய்வீகமானால் என்னிடத்திலும் அதுவரலாமேயென்றான். அவ்விருவரும் இப்படிபேசிக்கொண் டிருக்கும்போது அக்குழந்

தை ஆசனத்தடியில் வந்திருந்தது, அதை அவன் கண்டு இது அழகானந்தமோவென்று ஆனந்தமடைந்து அணைத்துக்கொண்டு தன்மனைவிகையிற்கொடுக்க அவள்வாங்கினவுடனே ஸ்தனங்களினின்று பால்பெருக அக்குழந்தைக்குப் புகட்டினாள். இப்படியற்புதமாய் வளர்ந்து பின்பு அநேகருக்கு ஞானோபதேசஞ்செய்து மகிமையோடிருந்தனர். மற்றொருதினத்தில் ஏலேலசிங்கரது கப்பல்களைதட்டிப்போக அதைக்கேள்விப்பட்டு அவர் தம்மாசனுடனேசொல்ல, அவன் நம்மாலாவதென்னை நம்முடைய ஆசாரியருடனே சொலலுமென்ன, அவர்போய்



விண்ணப்பம் பண்ணிக்கொள்வதற்குமுன்னமே நாயனாரிந்த ஏலேலசிங்கரை அழைப்பித்துக் கூட்டிக்கொண்டுபோய்க் கப்பலிற்கயிறுபூட்டி அநேகம் படவுகார ரிழுத்திழுத் தெல்லவளவும் அசையாமற் பதிந்திருப்பதனால் அவர்களெல்லாஞ் சோர்ந்துவிடப்பதைக்கண்டு நாயனார் அதனருகிற்சென்று தமது திருக்கையாற்றொட்டு ஏலேலவென்றிழுங்களென்று கட்டளையிட, அப்படியே யிழுத்தார்கள் உடனே நிற்கவேண்டியபடி கப்பல்நின்றது, பின்பு ஒருகாலம் மழையில்லாமையா லுலகத்திற் றானியங்கொள்ளக் கிடையாம லநேகரிறந்துபோவதைக் கண்டு நாயனார்தமக்கு அன்புள்ளமாணாக்கனாகிய ஏலேலசிங்கரைப்பார்த்து நீ யிந்தப் பஞ்சகாலமாறுகிறவரைக்கும் வாங்கிக்கட்டிவைத்திருக்கிற நெல்லையெல்லாம் வாங்கினவிலைக்குக் குறவேற்றமாக விற்கக

டவையென்றநன அவரதுசொல்லை ஆகமமாகக்கொண்டு விற்றார்—பொருள் அபிவிர்த்தியாய் மலைபோலுங்குவிந்தன, அவர் கட்டி வைத்திருந்தநெல்லு ஏழுவருஷங்குறைந்ததில்லை. பின்புமழைபெய்து உலகம் க்ஷேமமடைந்தது மறுபடி அவரையழைத்துக் குருணிக் குறையவில்லென்றார் அப்படியேயிற்றார் அவரிடத்திருந்த நெல்லெல்லாம் மறுநாள் அஸ்தம



யத்திற்குள்ளே செலவாய்ப்போய்விட்டன, பின்பு நாயனார் நீர்நெல்லுவிற்று விர்த்தியானபொருளையெல்லாமுருக்கித் திரட்டிக்கடலிற்போட்டு விடுமெனஅவர் அப்படியேசெய்தார். அதையொரு பெருமீன் விழுங்கிற்று சிலநாளைக்குப்பின்பு அம்மீன் வலைக்காரர்கையிலகப்பட்டது, அதனை அவர்சோதிக்கும்போது அதன்வயிற்றில் பனைமும்பாசியும் படிந்தகொருஸ்தம்ப மிருகக அதனை ஏலேலசிங்கருக்குக் கொடுத்தார்கள் அவர்கருங்கல்லென்றெண்ணி ஸ்நானம்பண்ணுமிடத்திற் போடுவித்தார் அதன்மேல் நடத்தன்முதலியபயிற்சியால் மலிநமிக்கிப் பிர

ளே வித்வானுமெழுந்தருளியவா றெற்றிக்கண்காட்டி னுங்குற்றங்குற்றமேயென்று கூறினவர்களும் மற்றப்புலவர்கள் பாடியபாடலை யெல்லாங் கொள்ளாமலிட்டு அகஸ்தியரையும் வெற்றிகொள்ளத்தக்க விலக்கணவிலக்கிய வாராய்ச்சியுள்ளவர்களுமாகிய நக்கீரராதிப் புலவர்களுடைய தைரியமுஞ்செருக்கமும்புத்தியுங்கலங்கிச்சோர்வடையும்படி ஆட்டுக்கூட்டத்தில புலிபுகுந்தாற்போலும், அராக்கூட்டத்தில் கருட



னடைந்தாற்போலும் யானைக்கூட்டத்தில் சிங்கவேறு சென்றாற்போலும் மூங்கில்வனத்தில் தீப்பற்றியதுபோலவு மவர்களிடத்திற்சென்று அவர்கள்தம்மை வினவின அசதிவினாவிற்கெல்லாஞ் செந்தமிழ்ப்பாவாலுத்தரங் கொடுத்தார்.

பின்புசங்கத்தார் நாயனாரைநோக்கி வள்ளுவரே நீர்பாடியகுறளை நாங்க ளொப்புக்கொள்வதற்கு ஐயமொன்றுளது அஃதியாதெனின் நாங்களிருக்கு மிந்தப்பலகைதெள்ளியசெந்தமிழ் நூலைக்கண்டா லிடங்கொடுக்குமாதலால் அது ஒப்புக்கொள்ளுமாயின் எங்களுக்கெல்லாஞ் சம்மதியென்றுசொல்ல அவ்வாறே நாயனார்தம்மால் அருளிச்செய்யப்பட்டதிருக்குறள்முறையை அச்சங்கப்பலகைமீது வைத்தார். உடனே அப்பலகை தன்னிடத்திலிருந்த சங்கத்தார்யாவரும் பொற்றாமரையில்விழும்படி தெய்வத் தன்மைபொருந்திய திருக்குறட் புத்தகத்தி னளவாய்ச் சுருங்கி அதற்குமாத்திரமிடங் கொடுக்கக்கண்டவர்கள் யாவருங்களிகூர்ந்தனர். அவருட்சிலர் இது தெய்வீகமாகியவேதமென்றுஞ்சிலர் அதங்கங்களென்று

ஞ்சிலர் ஞானநூலென்றுஞ்சிலர் ஆகமமென்றுஞ்
சிலர் புராணங்களென்றுஞ்சிலவாயிபர்மதனுகமமெ
ன்றுந் தத்தமக்குத்தோன்றியவாறே சொல்லித்துதி



தனர், அன்றியும்அநேகவிசேஷமான தெலுங்கா
சாஸ்திரங்களும் கிரந்தமுதலான பாஷைகளிலிரு
க்கின்ற பலநூல்களும் இத்திருக்குறளிலொரு பாயிர
ஒனோர்பாடலின் பொருளுக்கு பொவ்வாதென்று
இதுவே வித்வான்களுடைய பாக்கியமென்றும்.
ந்தப்பயன் அநேகமாயிரம அகஸ்தியர்கள் ஒருரு
ாகிவந்து பாடப்பட்டதோவென்றும பலவித வில
கணவிலக்கியங்கட்கும் இஃதிலக்கணந யொக்கு
மென்றும் விஷ்ணுவானவ ரிவ்வுலகைஇரண்டடியா
ளந்தார் இது எல்லாருளத்தையுமீரடியா லளந்த
தென்றும் இது சட்சமயத்துக்கும்பொது நூலென்
றும் உட்சமயத்துக்கே யுரியநூலென்றும் இப்படி

கல்விமான்களும அரசர்களும், மற்றவருங்கொண்
டாடித் துதிக்கும்போது பொற்றாமரையில்வீற்று
மொழி வருந்திய புலவர்நாற்பத்தொன்பதின் மரு
் மிகக்கலங்கிக்கரையேறி நாயனாரையும் திருக்குற
ளையும் புகழ்ந்துதுதித்து நாற்பத்தொன்பதின்மரும்
நாற்பத்தொன்பதுபாடல் அருளிச்செய்தனர் அ
து திருவள்ளுவமாலையெனப் பெயர்பெறும்.

அச்சங்கத்தாரும் உக்கிரப்பெருவழுதியென்னும்
பாண்டியன் முதலானவர்களும் அதயந்தம் ஆனந்த
டைந்து வெகுபூசிதம்பண்ணி இந்நூலை அகஸ்திய



(வெண்பா.)

அடிசிற்கினியாளே யன்புடையாளே.......... .........
படிசொற்றவறாதபாவா - யடிவருடிப் ..... .......
பின்றூங்கிமுன்னெழுந்த பேதையேபோதியோ...
வென்றூங்கு மென்கணிரா.......... ..........

என்றருளிஅந்தஅம்மாள் திருமேனியைச்சமாதி பண்ணினார், நாயனார்பின்னுமநேககாலிருந்து அநேகமகிமைகள்செய்து ஏலேலசிங்கர்முதலாகிய சிஷர்களுக்குப் பூரண அனுக்கிரகம்பண்ணிப் பின்பு ஏலேலசிங்கரையழைத்து நமக்குப்பரிபூரணதிசைநேரிட்டிருக்கின்றதால் நாம்பரிபூரணமானபின்பு நமது தேகத்தைப் புரிகட்டியிழுத்து ஊருக்குப்புறத்தில் புதரிற்போட்டுவிடுமென் றனுக்கிரகஞ்செய்து நிஷ்டைகூடிப் பரிபூரணமானவர்போ லிருக்கக்கண்டு ஏலேலசிங்கர் பொற்பெட்டியில்வைத்தடக்கம்பண்ண எத்தனித்ததை அறிந்தவுடனே நாயனார் விழித்துப்பார்த்து அப்பா நான்சொன்னசொல்லைக் கட

வாதையென்று அனுக்கிரகித்து உடனேபரிபூரணை
மானார், ஏலேலசிங்கரும் நாயனார் கட்டளைப்படி செ
ய்யுமளவில் திருமேனியிற்சிதலியநகைகளெல்லாமுமு
தலானதுக ளருந்திப் பொன்மயமானதைக் கண்டு
பெரிதான ஆச்சரியமடைந்து அவர் திருமேனியிருந்
தவிடத்தாலயமெடுப்பித்தும் பூசித்துவந்தார்கள்.

திருவள்ளுவநாயனார்-சரித்திரம்
முற்றிற்று.



(மேற்படி-சரித்திரத்திலுட்பட்டபாட்டுகள்)

சொக்கநாதர்-தருமியென்னும்
பிராமணனுக்கு அருளிச்செய்தது,
திருமுகப்பாசுரம் அகவல்;

கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி ... ... *
காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ...... ... ...*
பயிலியதுகெழீஇயநட்பின்................ ... ......*
மயிலியற்செறியெயிற்றரிவைகூந்தலி.................*
னறியவுமுளவோநீயறியும்பூவே.. ........ ... ...*

சொக்கநாதர்
நக்கீரரைப்பார்த்துச்சொல்லியது
(வெண்பா.)

அங்கங்குலையவரிவாளினைப்பூசிப்... ... ... ......*
சங்கறுப்பதெங்கள்குலம்-சங்கரனா.........*
ர்க்கேதுகுலமுரைக்கவல்லாய்நீயானால்... .......*
நக்கீரனோசொற்குற்றங்கண்டவன்.......... ......... ..........*

சொக்கநாதரைப்பார்த்து
நக்கீரர்சொல்லியது.
(வெண்பா.)

சங்கறுப்பதெங்கள்குலஞ்சங்கரனார்க்கேதுகுலம் *
பங்கமறச்சொன்னாற்பழுதாமே-சங்கை... ... ...*
யரிந்துண்டுவாழ்வோமரனேபின்போல..........*
விரந்துண்டுவாழ்வதில்........ ........ ..........*

௩௨. திருவள்ளுவநாயனார்சரித்திரம்.

சங்கத்தாரைவெல்லவேண்டி ஒளவைஞானக் குறியாற் கைசைகைகள் பண்ணி இவைபென்னென் றுகேட்கச் சங்கத்தார் சொல்லியது.

(வெண்பா.)

இவ்வளவுகண்ணிணிவ்வளவுசிற்றிடையா.......*
ளிவ்வளவுபேர்ன்றவிளமுலையா-ளிவ்வளவாய்க்...*
காமத்தலைவனையுக்காணுதகன்றனை........ ......*
ஞமத்தைகாட்டுகுறிங்கு.................. .......*

இஃது தகுதியான உத்தரவின்றென்று அக்குறி களுக்கு ஒளவைசொல்லியது.

(வெண்பா)

ஐயமிடுமின்றநெறிவைபக்கப்பிடிமி.......... .......*
ளிவ்வளவேனும்மனத்தைவிட்டுண்மின்-தெய்வ...*
மொருவனேயென்னவுணரவல்லீரே......... ......*
லருவினைகளாந்துமதும்............... ....... .......*

இப்படியென்று ஒளவை சொல்லச் சங்கத்தார் நாணமுற்று இவளை வெல்லப்படாதென்று திருவள் ளுவரைப்பார்த்து நீ செத்தஞ்சென்றதற்கு அவர் சொல்லியது.

(வெண்பா.)

எந்தலூரென்றீரிருந்தலூர்ரீர்கேளீ...... ... ...........*
ரந்தலூர்செய்தியறியீரோ-வந்தலூர் ......... ......... *
முப்பாழும்பாழாய்மு டிவிலொருசூனியமா..........*
யப்பாலும்பாழாயறும்.......................... .........*

என்றிதுமுதலான ஞானார்த்தமான செய்யுட்களாலேவர்வினவியவைகளுக்கெல்லாம் உத்தரவுசொல்ல இவனையும் வெல்வதரிதென்று இடைக்காடருட்லேபேச அவரருளியது.

(வெண்பா.)

ஆற்றங்கரையினருகிருந்தமாமரத்திற்...... .......*
காக்கையிருந்துகஃகஃனெக்-காக்கைக்கே ... ...*
யெய்யக்கோலில்லாம விச்சிச்செனேயெய்தா... ..*
வையக்கோனார்தன்மகன்................ ............*

இதுபோன்ற அநேகஞ் செய்யுட்களை அவர்களாலெழுதப்படாமலும், கற்றுக்கொள்ளப் படாமலுஞ்சொல்ல நாணித் தோற்பனடந்தார்கள்.

திருவள்ளுவநாயனார் சரித்திரம்
முற்றிற்று.

---

உ



சங்கத்தார்செய்த

# திருவள்ளுவர்மாலை.



(அசரீரி)

திருத்தகுதெய்வந் திருவள்ளுவரோ...... .........*
டுருத்தகுநற்பலகையொக்க விருக்க .......... ...*
வுருத்திரசன்மரென வுரைத்துவானி......... ......*
லொருகவேவென்றதோர்சொல்..............(க)

(நாமகள்)

நாடாமுதனூன்மறைநான்முகனாவிற் ............*
பாடாவிடைபாரதம்பகர்ந்தேன்-கூடாரை... ......*
யெள்ளியவென்றியிலங்கிலைவேன்மாறபின் ... ...*
வள்ளுவன்வாயதென்வாக்கு............ ...... ..(உ)

(இறையனார்)

என்றும்புலராதியாணர்நாட்செல்லுகினு... ... ...*
நின்றலர்ந்துதேன்பிலிற்று நீர்மையதாய்-குன்றாத
செந்தளிர்க்கற்பகத்தின் றெய்வத்திருமலர்போன் *
மன்புலவன்வள்ளுவன்வாய்ச்சொல்... ... (௩)

(உக்கிரப்பெருவழுதியார்)

நான்மறையின்மெய்ப்பொருளை முப்பொருளாநான்
முகத்தோன்-றான்மறைந்து வள்ளுவனாய்த்தந்துரை



த்த-நூன்முறையை-வந்திக்கசென்னிவாய்வாழ்த்து
கநன்னெஞ்சம்-சிந்திக்ககேட்கசெவி ... ... (௪)

(கபிலர்)

தினையளவுபோதாச்சிறுபுன்னீர்நீண்ட ... ... *
பனையளவுகாட்டும்படித்தால்-மனையளகு ... *
வள்ளைக்குறங்கும்வளநாட்வள்ளுவனார் ... *
வெள்ளைக்குறட்பாவிரி... ... ... (௫)

(பரணர்)

மாலுங்குறளாய்வளர்ந்திரண்டுமாணடியால்...
ஞாலமுழுதுமளந்தான்-வாலறிவின் ...
வள்ளுவருந்தங்குறள்வெண்பாவடியால்வையத்தா
ருள்ளுவவெல்லாமளந்தாரோர்ந்து ... (௬)

(நக்கீரர்)

தானேமுழுதுணர்ந்துதண்டமிழின்வெண்குறளா
லானாவறமுதலாவந்நான்கு-மேனோருக் ... ...
கூழினுணர்த்தார்க்குபொண்ணீர்முகிலுக்கும்... ...
வாழியுலகென்னாற்றுமற்று... ... ... (எ)

(மாமூலனார்)

அறம்பொருளின்பம்வீ டென்னுமந்நான்கின்......
றிறந்தெரிந்துசெப்பியதேவை-மறந்தேயும்... ...



வள்ளுவனென்பானோர் பேதையவன்வாய்ச்சொற்
கொள்ளாரறிவுடையார் ... ... ... (அ)

(கல்லாடர்)

ஒன்றேபொருளென்னின் வேறென்பவேறென்னி
னன்றென்பவாறுசமயத்தார்-நன்றென ... ...
வெப்பாலவருமியைபவேவள்ளுவனார் ...
முப்பான்மொழிந்தமொழி... ... (௯)

(சீத்தலைச்சாத்தனார்)

மும்மலையுமுந்நாடுமுந்நதியுமுப்பதியு ... *
மும்முரசுமுத்தமிழுமுக்கொடியு-மும்மாவுந் ...... *
தாமுடையமன்னர் தடமுடிமேற்றான்றே ... *
பாமுறைதேர்வள்ளுவர்முப்பால் ... ... (ய)

(மருத்துவன்றாமோதரனார்)

சேந்நீர்க்கண்டந்தெறிசுக்குத்தேனளாய் ... ... *
மோந்தபின்யார்க்குந்தலைக்குத்தில்-காந்தி ... ... *
மலைக்குத்துமால்யானைவள்ளுவர்முப்பாலாற் ...... *
றலைக்குத்துத்தீர்வுசாத்தற்கு ... ... (யக)

(நாகன்றேவனார்)

தாளார்மலர்ப்பொய்கை தாங்குடைவார்தண்ணீரை *
வேளாதொழிதல் வியப்பன்று-வாளாதா ... *

திருவள்ளுவர்மாலை. கஎ

மப்பாலொருபாவையாய்பவோவள்ளுவனார் ... *
முப்பான்மொழிமூழ்குவார் ... ... (யஉ)

(அரிசிற்கிழார்)

பரந்தபொருளெல்லாம்பாரறியவேறு ... *
தெரிந்துநிறந்தோறுஞ்சேரச்-சுருங்கிய ... *
சொல்லால்விரித்துப் பொருள்விளங்கச்சொல்லுதல்
வல்லாரார்வள்ளுவரல்லால் .. ... .. (யங)

(பொன்முடியார்)

சானின்றதொன்கலய்காசிபனார்தந்ததுமுன் ...... *
கூறின்றளந்தகுறளென்ப-நூன்முறையால் ... ... *

வானின்றுமண்ணின்றளந்ததேவள்ளுவனார்...
தானின்றளந்தகுறள்... ... ... (௨௪)

(கோதமனார்)

ஆற்றலழியுமென்றந்தணர்கணான்மறையைப் ...
போற்றியுரைத்தேட்டின் புறத்தெழுதார்-ஏட்டெழு
தி-வல்லுநரும்வல்லாரும்வள்ளுவனார்முப்பாலைச்
சொல்லிடினுமாற்றல் சோர்வின்று ... ... (௨௫)

(நத்தத்தனார்)

ஆயிரத்து முந்நூற்று முப்பதருங்குறளும் ... ...
பாயிரத்தினொடு பகர்ந்ததற்பின்-போயொருத்தர்,

௩-அ திருவள்ளுவர்மாலை.

வாய்க்கேட்கநூலுளவோ மன்னுதமிழ்ப்புலவ...
ராய்க்கேட்கவீற்றிருக்கலாம... ... ... (௨௬)

(முறையூர்ச்சிறுகருந்தும்பியார்)

உள்ளுதலுள்ளியுரைத்தலுரைத்ததனைத் ...
தெள்ளுதல்நேசெயற்பால-வள்ளுவனார் ...
முப்பாலின்மிக்கமொழியுண்டெனப்பகர்வா ......
ரெப்பாவலரினுமில்...... ... ... (௨௭)

(ஆசிரியநல்லந்துவனார்)

சாற்றியபல்கலையுந்தப்பாவருமறையும் ....
போற்றியுரைத்தபொருளெல்லாந்-தோற்றவே ...
முப்பான்மொழிந்தமுதற்பாவலரொப்பா ...
ரெப்பாவலரினுமில்... .... .... (௨௮)

(கீரந்தையார்)

தப்பாமுதற்பாவாற்றாமாண்டபாடலினின் ...

முப்பாலினாற்பான்மொழிந்தவ-ரெப்பாலும் ... *
வைவைத்தகூர்வேல்வழுதிமனமகிழத் ... ... *
தெய்வத்திருவள்ளுவர் ... ... ... (௧௯)

(சிறுமேதாவியார்)

வீடொன்றுபாயிரநான்குவிளக்கற ... ... *
நாடியமுப்பத்துமூன்றென்றாழ் கூடியொரு .. *



ளெள்ளிலெழுபதிருபதிற்றைந்தின்பம் ... *
வள்ளுவர்சொன்னவகை ... ... (௨௰)

(நல்கூர்வேள்வியார்)

உப்பக்கநோக்கியுபகேசிதோண்மணந்தா ... *
னுத்தரமாமதுரைக்கச்சென்ப-விப்பக்க ... *
மாதானுபங்கிமறுவில்புலச்செந்நாப் ... ... *
போதார்புனற்கூடற்கச்சு ... ... (௨௧)

(தொடித்தலைவிழுத்தண்டினார்)

அறநான்கறிபொருளேழொன்றுகாமந் ... ... ... *
திறமூன்றெனப்பகுதிசெய்து பெறலரிய ... *
நாலுமொழிந்துபெருநாவலரோ நன்குணர்வார் ... *
போலுமொழிந்தபொருள் ... (௨௨)

(வெள்ளிவீதியார்)

செய்யாமொழிக்குந்திருவள்ளுவர்மொழிந்த .. *
பொய்யாமொழிக்கும்பொருளொன்றே-செய்யா... *
வதற்குரியாரந்தணரேயாராயினேனை ... *
யிதற்குரியாரல்லாதாரில்... ... ... (௨௩)

(மாங்குடிமருதனார்)

ஒதற்கெளிதாயுணர் தற்கரிதாகி ... ௪
வேதப்பொருளாய்மிகவிளங்கி-நீதற்றே ... ௪



ருள்ளுதோறுள்ளுதோறுள்ளமுருக்குமே ... ௪
வள்ளுவர்வாய்மொழிமாண்பு ... (உ௪)

(எரிச்சலூர்மலாடனார்)

பாயிரநான்கில்லறமிருபான்பன்மூன்றே ... ௪
தூயதுறவறமொன்றாமாக-வாய ... ௪
வறத்துப்பாலுவ்வகையாலாய்ந்துரைத்தார் நூலின்
றிறத்துப்பால்வள்ளுவனார்தேர்ந்து... (உ௫)

(போக்கியார்)

அரசியலையைந்தமைச்சியலீரைந்
தருவல்லரணிரண்டொன்றேண்கூ-ழிருவி
றிண்படைநட்புப்பதினேழ்குடிபதின்மூன் ... ௪
றெண்பொருளேழாமிவை ... ... (உ௬)

மோசிகீரனார்

ஆண்பாலேழாறிரண்டுபெண்பாலடுத்தன்பு ... ௪
பூண்பாலிருபாலோராறாக-மாண்பாய ... ... ௪
காமத்தின்பக்கமொருமூன்றாகக்கட்டுரைத்தார் ... ௪
நாமத்தின்வள்ளுவனார்நன்கு... ... (உ௭)

காவிரிப்பூம்பட்டினத்துக்
காரிக்கண்ணனார்.

ஐயாறுநூறுமதிகாரமூன்றுமா ... ௪
மெய்யாயவேதப்பொருள்விளங்க-பொய்யாது... ௪

தந்தானுலகிற்குத்தான் வள்ளுவனாகி ... *
யந்தாமனைமேலயன் ... ... ... (உ அ)

மதுரைத்தமிழ்நாயகனார்!

எல்லாப்பொருளுமிதன்பாலுளவிதன்பா ... *
லில்லாதவெப்பொருளுமில்லையாற்-சொல்லாற் ... *
பரந்தபாவாலென்பயன் வள்ளுவனார் ... *
சுரந்தபாவையத்துணை ... ... ...(உகூ)

பாரதம்பாடியபெருந்தேவனார்.

எப்பொருளும்யாருமியல்பினறிவுறச் ... *
செப்பியவள்ளுவர்தாஞ் செப்பவரு முப்பாற்குப் *
பாரதஞ்சீரா மகதை மறைபண்டைமறை... ...
நேர்வன மற்றில்லை பிசர் ... ... ... (ஙூ).

உருத்திரசன்மகண்ணனார்.

மணற்கிளக்கநீருநுமைந்தர்கள்வாய்வைத் ... *
துணைச்சாக்குந்தாயமுலை யொன்பால்-பிணைக்கிலா *

வாய்மொழிவள்ளுவர் முப்பான்மதிப்புலவோர்க் *
காய்தொறூமூறு மறிவு ... ... (ஙக)

பெருஞ்சித்தனார்.

ஏதமில்வள்ளுவரின் குறள்வெண்பாவினை... ... *
லோதியவொண்பொருளெல்லா முரைத்தனாற் *
றூதவிழ்தார்மாறனாமே தமைப்பயந்த ... *
வேதமேமேதக்கன ... ... (ஙஉ)

பிற திருவள்ளுவர்மாலை.

நரிவெருத்தலையார்.

இன்பம்பொருளறம்வீடென்னுமிந்நான்கு ... *
முன்பறியச்சொன்ன முதுமொழிநூல்-மன்பதைக
ட்-குள்ளவரிதென்றவைவள்ளுவருலகங் ... *
கொள்ளமொழிந்தார்குறள் ... (௰௩)

மதுரைத்தமிழாசிரியர்

செங்குன்றூர்க்கிழார்.

புலவர்திருவள்ளுவரன்றிப்பூமேற்... ... *
சிலவர்புலவரெனச்செப்பல்-நிலவு... ... *
பிறங்கொளிமாலைக்கும் பெயர்மாலைமற்றுங் ... *
கறங்கிருண்மாலைக்கும்பெயர்... ... (௰௪)

மதுரையறுவைவாணிகனிளவேட்டனார்.

இன்பமுந்துன்பமுமென்னு மிவையிரண்டு ... *
மன்பதைக்கெல்லாமனமகிழ-வன்பொழியா... ...*
அள்ளியுணர்வுரைத்தாரேயோதுசீர் ... *
வள்ளுவர்வாயுறைவாழ்த்து ... (௰௫)

கவிசாகரப்பெருந்தேவனார்.

பூவிற்குத்தாமரையேபொன்னுக்குச்சாம்பூநதம் ... *
மாவிற்கருமுனியாயானைக்-கமரரும்ப .. *
ரேவிற்கிருமாலெனச்சிறந்ததென்பவே ... *
பாவிற்குவள்ளுவர்வெண்பா... ... (௰௬

திருவள்ளுவமாலை. ௩௰

மதுரைப்பெருமருதனார்.

அறமுப்பத்தெட்டுப்பொருளெழுபதின்பத் … … *
திறமிருபத்தைந்தாற்றெளிய-முறைமையால் … … *
வேதவிழுப்பொருளை வெண்குறளாற்வள்ளுவனு … *
ரோதவழுக்கற்றதுலகு … … (கஎ)

கோவூர்க்கிழார்.

அறமுதனான்குமகவிடத்தோரெல்லாந் … … *
திறமுறத்தேர்ந்து தெளியக்குறள்வெண்பாப் … *
பன்னியவள்ளுவனார்பான்முறைநேரொவ்வாதே *
முன்னைமுதுவோர் மொழி … … … (கஅ)

உறையூர் முதுகூத்தனார்.

தேவிற்சிறந்த திருவள்ளுவர்குறள்வெண்
பாவிற்சிறந்திடும்பால்பகரார்-நாவிற
குயலில்லைச்சொற்சுவையோர்வில்லைமற்றுஞ்
செயலில்லையென்னுந் திரு (கக)

இழிகட்பெருங்கண்ணனார்.

இம்மைமறுமையிரண்டு மெழுமைக்குஞ்
செம்மைநெறியிற்றெளிவுபெற-மும்மையின்

வீடவற்றினான்கின் விதிவழுங்கவள்ளுவனார்
பாடினரின்குறள்வெண்பா. (சo)

செயிற்காவிரியார்மகனார்சாத்தனார்,

ஆவனவுமாகாதனவுமறிவுடையார்
யாவரும்வல்லாரெடுத்தியம்பத்-தேவர்

சச திருவள்ளுவர்மாலை.

திருவள்ளுவர்தாமுஞ் செப்பியவேசெய்வார்
பொருவிலொழுக்கம் பூண்டார். (சக)

செயலூர்க்கொடுஞ்செங்கண்ணனார்,

வேதப்பொருளை விரகால்விரித்துலகோ

ரோதத்தமிழாலுரைசெய்தா ராதலா
லுள்ளுநருள்ளும் பொருளெல்லாமுண்டென்ப
வள்ளுவர்வாய்மொழி மாட்டு. (௪௨)

வண்ணக்கஞ்சாத்தனார்.

ஆரியமுஞ்செந்தமிழுமாராய்ந்திதனினிது
சீரியதென்றொன்றைச் செப்பரிதா-லாரியம்
வேதமுடைத்துத்தமிழ் திருவள்ளுவனா
ரோதுகுறட்பா வுடைத்து. (௪௩)

களத்தூர்க்கிழார்,

ஒருவரிருகுறளே முப்பாலினோதுந்
தருமமுதனான்குஞ்சாலு-மருமறைக
ளைந்துஞ்சமயநூலாறு நம் வள்ளுவனார்
புந்திமொழிந்த பொருள். (௪௪)

நச்சுமனார்;

எழுத்தசைசீரடி சொற்பொருள்யாப்பு
வழுக்கில்வனப் பணிவண்ண-மிழுக்கின்றி
யென்றெவர்செய்தனவெல்லாமியம்பின
வின்றிவரின்குறள் வெண்பா. (௪௫)



அக்காரக்கனிநச்சுமனார்,

கலைசிரம்பிக்காண்டற் கினிதாகிக்கண்ணி
னிலைசிரம்புநீர்மைத்தெனினுந்-தொலைவிலா
வானார்மதியந்தனக்குண்டோவள்ளுவர்முப்
பானூனயத்தின் பயன். (௪௬)

நப்பாலத்தனார்,

அறந்தகளியான்ற பொருடிரியின்பு
சிறந்தநெய்செஞ்சொற்றீத்தண்டு-குறும்பாவால்
வள்ளுவனாரேற்றினார் வையத்துவாழ்வார்க
ளுள்ளிருணீக்கும் விளக்கு. (சள)

குலபதிநாயனார்,

உள்ளக்கமலமலர்த்தியுளத்துள்ள
தள்ளற்கரியவிருடள்ளுதலால்-வள்ளுவனார்
வெள்ளைக்குறட்பாவும் வெங்கதிருமொக்குமெனக்
கொள்ளத்தகுங்குணத்தைக் கொண்டு. (சஅ)

தேனிக்குடிக்கீரனார்,

பொய்ப்பாலபொய்யேயாய்ப் போயினபொய்யில்லா
த-மெய்ப்பாலமெய்யாய்விளங்கினவே-முப்பாலிற்
றெய்வத்திருவள்ளுவர் செப்பியகுறளால்
வையத்துவாழ்வார் மனத்து. (சக)

கொடிஞாழன்மாணிபூதனார்,

அறனறிந்தேமான்றபொரு ளறிந்தேமின்பின்
றிறனறிந்தேம்வீடுதெளிந்தே-மறமெறிந்த

திருவள்ளுவர்மாலை.

வாளார்நெடுமாறவள்ளுவனார்தம்வாயாற்
கேளாதனவெல்லாங் கேட்டு. (ருய)

கவுணியனார்,

சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்தவிருவினைக்குமா மருந்து-முந்திய
நன்னெறிநாமறியநாப்புலமை வள்ளுவனார்
பன்னியவின்குறள் வெண்பா. (ருக)

மதுரைப்பாலாசிரியனார்,

வெள்ளிவியாழம் விளங்கிரவிவெண்டிங்கள்
பொள்ளெனநீக்கும் புறவிருளைத்-தெள்ளிய
வள்ளுவரின்குறள் வெண்பாவுலகத்தோ
ருள்ளிருணீக்கு மொளி. (௫௨)

ஆலங்குடிவங்கனார்,

வள்ளுவர்பாட்டின் வளமுரைக்கின்வாய்மடுக்குந்
தெள்ளமுதின்றீஞ்சுவையு மொவ்வாதாற் - றெள்ள
முதமுண்டறிவார்தேவ ருலகடையவுண்ணுமால்
வண்டமிழின்முப்பான் மகிழ்ந்து. (௫௩)

திருவள்ளுவமாலை

முற்றிற்று.

---

# திருவள்ளுவநாயனார் குறள்.

முதல். அதிகாரம். அறத்துப்பால்.

பாயிரம். கடவுள்வாழ்த்து.

அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. (௧)

கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழா அரெனின். (௨)

மலர்மிசை யேகினான் மாணடிசேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். (௩)
வேண்டுதல் வேண்டாமை யிலானடிசேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில. (௪)
இருள்சே ரிருவினையுஞ் சேராவிறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. (௫)
பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். (௬)
தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க்கல்லா
ல், மனக்கவலை மாற்ற லரிது. (௭)
அறவாழியந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது. (௮)
கோளில்பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை. (௯)
பிறவிப்பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவனடி சேரா தார். — (௰)

ஆக-௰

௨. உ-ம், அதி, வான்சிறப்பு.

வானின்றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று. (௧)
துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித்துப்பார்க்குத் *
துப்பாய தூஉ மழை. (௨)
விண்ணின்று பொய்ப்பின் விரிநீர்வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி. (௩)

ஏரினுழா அருழவர் புயலென்னும்
வாரிவளங் குன்றிக் கால். (௪)

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை. (௫)

விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது. (௬)

நெடுங்கடலுந் தன்னீர்மைகுன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின். (௭)

சிறப்பொடுபூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. (௮)

தானந்தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். (௯)

நீரின்றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. (௰)

ஆக-௨௰.

௩-ம் அதி. நீத்தார்பெருமை. ௩

ஒழுக்கத்துநீத்தார் பெருமை விழுப்பத்து ... *
வேண்டும் பனுவற் றுணிவு ... (௧)

துறந்தார்பெருமை துணைக்கூறின் வையத் ... ...*
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று ... (௨)

இருமைவகைதெரிந் தீண்டறம்பூண்டார் ... *
பெருமை பிறங்கிற் றுலகு ... ... (௩)

உரனென்னுந் தோட்டியானோரைந்துங் காப்பான் ✻
வரனென்னும் வைப்பிக்கோர் வித்து ... (ச)

ஐந்தவித்தானாற்ற லகல்விசும்பு ளார்கோமா ... ✻
னிந்திரனே சாலுங்கரி ... ... (ரு)

செயற்கரியசெய்வார் பெரியர் சிறியர் ... ✻
செயற்கரிய செய்கலா தார் ... ... (சா)

சுவையொளியூறோசை நாற்றமென் றைந்தின் ... ✻
வகைதெரிவான் கட்டே யுலகு ... (எ)

நிறைமொழிமாந்தர் பெருமை நிலத்து ... ✻
மறைமொழி காட்டி விடும் ... (அ)

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி ... ✻
கணமேயுங் காத்த லரிது ... ... (கூ)

அந்தணரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ் ✻
செந்தண்மை பூண்டொழுக லான் ... ( )

ஆக் கூ௰.

௪. ௪-ம் அதி. அறன்வலியுறுத்தல்.

சிறப்பீனுஞ் செல்வமு மீனுமறத்தினூஉங் ... ✻
காக்க மெவனோ வுயிர்க்கு ... (க)

அறத்தினூஉங்காக்கமு மில்லை யதனை ... ✻
மறத்தலினூஉங் கில்லை கேடு ... (உ)

ஒல்லும்வகையா லறவினை யோவாதே ... ✻
செல்லும்வா யெல்லாஞ் செயல். ... ... (ந)

மனத்துக்கண் மாசில னாத லனைத்தற ... *
னாகுல நீர பிற. ... ... (௪)

அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கு ... *
மிழுக்கா வியன்ற தறம். ... ... (௫)

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது ... *
பொன்றுங்காற் பொன்றாத் துணை ... (௬)

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை. ... *
பொறுத்தானோ டூர்ந்தா னிடை ... (௭)

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன் *
வாழ்நாள் வழியடைக்குங் கல். ... (௮)

அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம். ... *
புறத்த புகழு மில. ... ... (௯)

செயற்பால தோரு மறனே யொருவற் ... *
குயற்பால தோரும் பழி ... ... (௰)

ஆக ௪௰.

## ௫-ம். அதி. இல்வாழ்க்கை. ௫

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு ... *
நல்லாற்றி னின்ற துணை. ... (௧)

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு ... *
மில்வாழ்வா னென்பான் றுணை. ... (௨)

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங் *
கைம்புலத்தா றோம்பல் றலை. .. ... (௩)

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை *
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில். ... (௪)

அன்புமறனு முடைத்தாயி னில்வாழ்க்கை ... *
பண்பும் பயனு மது ... ... (ரு)

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற் *
போஒய்ப் பெறுவ தெவன் ... ... (சு)

இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான் ... *
முயல்வாரு ளெல்லாந் தலை ... ... (எ)

ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை ... *
நோற்பாரி னோன்மை யுடைத்து ... ... (அ)

அறனெனப்பட்டதே யில்வாழ்க்கையஃதும் ... *
பிறன்பழிப்ப தில்லாயி னன்று ... ... (கூ)

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந் *
தெய்வத்துள் வைக்கப் படும் ... ... (ய)

ஆக ருo.

சு-ம், அதி. வாழ்க்கைத்துணைநலம்.

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான் *
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை ... (க)

மனைமாட்சியில்லாள்க ணில்லாயின்வாழ்க்கை ... *
யெனைமாட்சித் தாயினு மில் ... (உ)

இல்லதெனில்லவள் மாண்பானா லுள்ளதெ ... *
னில்லவள் மாணாக் கடை ... ... (ங)

பெண்ணிற்பெருந்தக்க யாவுள கற்பென்னுந் ... *
திண்மையுண் டாகப் பெறின் ... (ச)

தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள் *
பெய்யெனப் பெய்யு மழை .. (ரு)

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித்தகைசான்ற *

சொற்காத்துச் சோர்விலாள் பெண் ... (௬)

சிறைகாக்குங் காப்பெவன் செய்யுமகளிர் ... ... ※
நிறைகாக்குங் காப்பே தலை .. (௭)

பெற்றாற்பெறிற்பெறுவர் பெண்டிர்பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு ... ... (௮)

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லையிகழ்வார்முன் ...※
னேறுபோற் பீடு நடை ... ... (௯)

மங்கலமென்ப மனைமாட்சி மற்றத ... ※
னன்கல நன்மக்கட் பேறு ... ... (௰)

ஆக ௬0.

௭-ம், அதி. புதல்வரைப்பெறுதல். ௭

பெறுமவற்றுள் யாமறிவ தில்லையறிவறிந்த ... ※
மக்கட்பே றல்ல பிற ... ... (௧)

எழுபிறப்புந் தீயவை தீண்டாபழிபிறங்காப்... ...※
பண்புடை மக்கட் பெறின் ... (௨)

தம்பொருளென்ப தம்மக்க ளவர்பொரு ... ※
டந்தம் வினையான் வரும் ... (௩)

அமிழ்தினுமாற்ற வினிதேதம் மக்கள் ... ※
சிறுகை யளாவிய கூழ் ... ... (௪)

மக்கண்மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர் ... ※
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு ... (௫)

குழலினி தியாழினிதென்பதம் மக்கண் ... ※
மழலைச்சொற் கேளா தவர் ... (௬)

தந்தைமகற்காற்று நன்றி யவையத்து ... *
முந்தி யிருப்பச் செயல் ... ... (௭)

தம்மிற்றம்மக்க ளறிவுடைமை மாநிலத்து ... *
மன்னுயிர்க் கெல்லா மினிது ... (௮)

ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச் ... ... *
சான்றோ னெனக்கேட்ட தாய் ... (௯)

மகன்றந்தைக் காற்று முதவியிவன்றந்தை ... *
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல் ... (௰)

ஆக. ௭௰.

௮ ௮-ம், அதி. அன்புடைமை.

அன்பிற்குமுண்டோ வடைக்குந்தா ழார்வலர் ... *
புன்கணீர் பூசறரும் ... ... (௧)

அன்பிலாரெல்லாந் தமக்குரிய ரன்புடையா ... *
ரென்புமுரியர் பிறர்க்கு ... ... (௨)

அன்போடியைந்த வழக்கென்ப வாருயிர்க் ... ... *
கென்போ டியைந்த தொடர்பு ... (௩)

அன்பீனுமார்வ முடைமை யதுவீனு ... *
நண்பென்னு நாடாச் சிறப்பு ... ... (௪)

அன்புற்றமர்ந்த வழக்கென்ப வையகத் ... *
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு ... ... (௫)

அறத்திற்கேயன்பு சார்பென்ப வறியார் ... ... *
மறத்திற்கு மஃதே துணை ... (௬)

என்பிலதனை வெயிற்போலக் காயுமே ... *
யன்பி லதனை யறம் ... ... ... (௭)

அன்பகத்தில்லாவுயிர்வாழ்க்கைவன்பாற்கண் ... *
வற்றன் மரந்தளிர்த் தற்று ... (அ)

புறத்துறுப்பெல்லா மெவன்செய்யும் யாக்கை ... *
யகத்துறுப் பன்பி லவர்க்கு .. (௯)

அன்பின்வழிய துயிர்நிலை யஃதிலார்க் ... *
கென்புதோல் போர்த்த வுடம்பு ... (௰)

௯ அம்.

௯ம் அதி. விருந்தோம்பல். ௯

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு ... (க)

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா ... *
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று ... (உ)

வருவிருந்து வைகலு மோம்புவான்வாழ்க்கை ... *
பருவந்து பாழ்படுத லின்று ... (ங)

அகனமர்ந்துசெய்யா ளுறையுமுக னமர்ந்து ... *
நல்விருந் தோம்புவா னில் ... ... (ச)

வித்துமிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி *
மிச்சின் மிசைவான் புலம் ... (ரு)

செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா... *
னல்விருந்து வானத் தவர்க்கு ... (சு)

இனைத்துணைத் தென்பதொன் றில்லைவிருந்தின் ... *
றுணைத்துணை வேள்விப் பயன் ... (எ)

பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி *
வேள்வி தலைப்படா தார் ... ...(அ)

உடைமையுளின்மைவிருந்தோம்ப லோம்பா ... *
மடமை மடவார்க ணுண்டு ... (௯)

மோப்பக்குழையு மனிச்சமுகந் திரிந்து ... ... *
நோக்கக் குழையும் விருந்து ... (௯௰)

ஆக கூ௰.

## ௰ ... ௰-ம், அதி. இனியவைகூறல்.

இன்சொலாலீ ரமளைஇப் படிறிலவாஞ் ... ... *
செம்பொருள்கண் டார்வாய்ச் சொல் ... (௧)

அகனமர்ந்தீதலி னன்றே முகனமர்ந் ... *
தின்சொல னாகப் பெறின் ... ... (௨).

முகத்தா னமர்ந்தினிது நோக்கியகத்தானா ... *
மின்சொ லினதே யறம் ... ... (௩).

துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு *
மின்புறூஉ மின்சொ லவர்க்கு ... .. (௪)

பணிவுடைய னின்சொல னாதலொருவற் ... *
கணியல்ல மற்றுப் பிற ... ... (௫).

எழுமையெழுபிறப்பு முள்ளுவர் தங்கண் ... *
விழுமந் துடைத்தவர் நட்பு ... (௭)

நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல ... *
தன்றே மறப்பது நன்று ... ... (அ)

கொன்றன்னவின்னா செயினு மவர்செய்த ... *
வொன்றுநன் றுள்ளக் கெடும் ... (௯)

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை *
செய்ந்நன்றி கொன்ற மகற்கு ... (௰)

ஆக ௱௰.

## ௰௪-ம், அதி. ஒழுக்கமுடைமை.

ஒழுக்கம்விழுப்பந் தரலா னொழுக்க ... *
முயிரினு மோம்பப் படும் ... ... ௧

பரிந்தோம்பிக்காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித் *
தேரினு மஃதே துணை ... ... ௨

ஒழுக்கமுடைமை குடிமை யிழுக்க ... *
மிழிந்த பிறப்பாய் விடும் ... ... ௩

மறப்பினுமோத்துக் கொளலாகும் பார்ப்பான் ... *
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும் ... ௪

அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை ... *
யொழுக்க மிலான்க ணுயர்வு ... ௫

ஒழுக்கத்தினொல்கா ருரவோ ரிழுக்கத்தி *
னேதம் படுபாக் கறிந்து ௬

ஒழுக்கத்தினெய்துவர் மேன்மை யிழுக்கத்தி *
னெய்துவ ரெய்தாப் பழி ௭

நன்றிக்குவித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க *
மென்று மிடும்பை தரும் ௮

ஒழுக்கமுடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல் ௬

உலகத்தோடொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார் ௰

ஒழுக்கமுடைமை.

௧௫-ம், அதி. பிறனில்விழையாமை. ௰௫

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமைஞா
லத், தறம்பொருள் கண்டார்க ணில் ௧

அறன்கடைநின்றா ரெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில் ௨

விளிந்தாரின்வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார் ௩

எனைத்துணையாரினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல் ௪

எளிதெனவில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி ௫

பகைபாவமச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண் ௬

அறனியலானில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன் ௭

பிறன்மனைநோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு ௮

நலக்குரியார்யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார் ௯

